# காந்தி அடிகள் பிள்ளைத்தமிழ்.



முன்னைப் பாடசாலைப் பரிசோதகர்,
அரங்கநாதபுரம் திராவிடக் கவிமணி
**வே. முத்துஸாமி ஐயர். M.A., L.T. அவர்களின்**
மைந்தனும் மாணவனும் ஆகிய
**மு. கோ. இராமன் இயற்றியது.**

---

அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியர்
உயர்திரு. டாக்டர்
**A. சிதம்பரநாத செட்டியார் M. A., Ph. D.**
அவர்கள் அளித்த முன்னுரையுடன் கூடியது.

---



1949

இதன் விலை அணா நான்கு.

# இந்நூலைப்பற்றிய சில பாராட்டுக்கள்.

சிறப்புப்பாயிரம்.

1. புதுக்கோட்டை மகாராஜா காலேஜ் தமிழ்ப்பேராசிரியர் பிர்மஸ்ரீ கவிராஜ பண்டித N. கனகராஜ ஐயர் B.O.L. பாடியது :-

ஆர்ந்தசீர்க் காந்தி அடிகள்பிள் ளைத்தமிழ்க்
கூர்ந்தமதி அன்புகொடு கூறினன் நூல்—தேர்ந்தபுலம்
வந்தமுத்து சாமி கவிமணியின் மாணவனும்
மைந்தன் கோ தண்டரா மன்.

2. பிர்மஸ்ரீ E.S.வரதராஜ ஐயர், B A., அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சியாளர், அரங்கேற்றத்தில் அளித்தது.

தள்ளரிய நீதித் தலியுருவாம் காந்திமகான்
பிள்ளைத் தமிழின்று பேசினன் — தெள்ளறிஞன்
கோதண்ட ராமப்பேர் கொண்டமுத்து சாமியெனும்
மேதைமகன் அன்பு மிக.

3. பிர்மஸ்ரீ C. R. மயிலேறு M.A., பல்கலைக் கழக ஆங்கில ஆசிரியர், நூல்அரங்கேறிய காந்தி ஆராய்ச்சிச் சங்கத்தின் செயலாளர் :—தங்களுக்கும் தங்கள் மைந்தருக்கும் அன்றைக் கூட்டம் திருப்தியளித்ததுபற்றி எனக்கு மிக்க சந்தோஷம். தங்கள் தமிழ் ஆக்கமும் மைந்தர் தமிழ்ச்சேவையும் சிறப்புற்றோங்க இறைவனை இறைஞ்சுகின்றேன்.

4. காவிய கலாநிதி பிர்மஸ்ரீ உ-வே R. ஸ்ரீநிவாஸாசாரியர், B.A.,B L., முன்னைப் பிரதம நீதிபதி, புதுக்கோட்டை, ஆங்கிலத்தில் அருளியதன் தமிழ்ப் பெயர்ப்பு :—

தங்கள் குமாரரின் கவிநயம் எனக்கு மிக்க மகிழ்ச்சி யளித்தது. செய்யுள்கள் எளிமையும் நேர்மையும் எய்திச் சரளமாகச் செல்லுகின்றன.

5. தேசீய கவி, உயர்திரு V. ராமலிங்கம் பிள்ளை, நாமக்கல்:- காந்தியாரைப்பற்றிய பாக்கள் வந்தன. பாட்டுக்கள் நன்றாக இருக்கின்றன. தங்கள் குமாரருக்கு என் வாழ்த்துக்கள்.

6. இராவ் பகதூர், தணிகைமணி, உயர்திரு V.S. செங்கல்வ ராய பிள்ளை, M. A., சென்னை :—

காந்தி பிள்ளைத்தமிழ் ஒரு குறைவுமின்றி ஒளிர்கின்றது. சிறுதேர்ப் பருவச் செய்யுள் உயர்ந்த கருத்துடன் மிளிர்கின்றது. குமாரரின் பாடல்களில் சொல்லழகோடு பொருட்சிறப்பும் கண்டு களிக்கின்றேன்.

உ

# காந்தி அடிகள் பிள்ளைத்தமிழ்.



முன்னைப் பாடசாலைப் பரிசோதகர்,
அரங்கநாதபுரம் திராவிடக் கவிமணி
**வே. முத்துஸாமி ஐயர். M.A., L.T. அவர்களின்**
மைந்தனும் மாணவனும் ஆகிய
**மு. கோ. இராமன் இயற்றியது.**



அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியர்
உயர்திரு. டாக்டர்
**A. சிதம்பரநாத செட்டியார் M. A., Ph. D.**
அவர்கள் அளித்த முன்னுரையுடன் கூடியது.



 1949 இதன் விலை அணா நான்கு.





சிந்தைமகிழ்ந் தாளியுடல் சேர்பொருள் தாரணிக்கே
தந்துமகிழ் வெய்தும் தகையாளன் —சந்திரன்போற்
சாந்தி ஒளிநகைக்கும் சத்தியவான் மோகனதாஸ்
காந்தி உருவமிது காண்.

---

# முன்னுரை.

**[அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியரும், "காந்தி ஆராய்ச்சிச் சங்கத்தில்" இந்நூலின் அரங்கேற்றத்தலைவரும் ஆகிய உயர்திரு. டாக்டர் அ. சிதம்பரநாத செட்டியார் M.A. Ph.D. அவர்களது]**

நம்முன் இன்று 'காந்தியடிகள் பிள்ளைத்தமிழ்' படித்துக்காட்டப் பட்டது. இதனை இயற்றியவர் திரு. மு. கோதண்டராமன் ஆவார். இவர் முன்னரே அப்பர் சுவாமிகள்மீது பிள்ளைத் தமிழ் ஒன்று இயற்றியுள்ளார். அதிற்போலவே இதிலும் பருவத்துக் கொரு பாட்டாகப் பத்துப் பாடல்கள் பாடியுள்ளார். இவர் நம் நண்பர் திரு. வே. முத்துசாமி ஐயர் M.A.,L.T. அவர்களின் புதல்வர்.

திரு. முத்துசாமி ஐயர் காலஞ்சென்ற டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களின் தலைசிறந்த மாணவருள் ஒருவர். விநாயகர் துதிப்பாக் கோவை, முருகன் துதிப்பாக் கோவை, ஆசிரியர் துதிப்பாக்கோவை, மாயூரநாதர் அந்தாதி, மாணிக்கவாசகர் பிள்ளைத்தமிழ் முதலிய பாநூல்கள் இயற்றி வெளியிட்டுள்ளார்; கும்பகோணம் மடாலயத் தலைவர் ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் மீது ஆற்றுப்படையும் அன்புவிடு தூதும் இயற்றியவர்.

இவருடைய திருமகனரால் இயற்றப்பெற்ற இப்பிள்ளைத் தமிழில் 10-பாடல்களும் எளிய இனிய நடையில் அமைந்திருக்கக் காண்கிறோம். பிள்ளைத்தமிழ் பாடுவோர் அருகிவிட்ட இக்காலத்திலே நம் மதிப்புக்குரிய காந்தியடிகள் பொருளாக ஆக்கப்பட்ட இந்நூல் இடையே சிலேடை, பிராசம், உருவகம் முதலிய அணிகளால் திகழ்கிறது. அம்புலிப்பருவப் பாட்டு அழகாக அமைந்துள்ளது: இந்நூலுக்கு இன்று திரு. முத்துசாமி ஐயர் விளக்கவுரை பகர்ந்தனர்.

தம் புதல்வரைக் கவிநயம் உடையவராக அவையத்தார் புகழக்கேட்டதும் ஐயரவர்கள் புதல்வரைப் பெற்ற ஞான்று உற்ற இன்பத்திலும் பேரின்பம் உறுவர் என்பது உறுதி. மகன் தந்தைக்குச் செய்யும் கைம்மாறெனத் திருவள்ளுவர் கூறிய முறையில் (இவன் தந்தை யாது தவம் செய்தனனோ என்று பிறர் பாராட்டுக் கூறுதல்) திரு. மு. கோ. இராமன் தந்தையார்க்குச் சிறந்த நன்றி செய்துள்ளார். இவர் மேன்மேலும் பல கவிகள் இயற்றி வளமும் நலமும் எய்திப் புகழோடு நீடு வாழ்வாராக.

அண்ணாமலைநகர் }
18-12-48 }

**அ. சிதம்பரநாத செட்டியார்**
தமிழ்ப் பேராசிரியர்.

# நான்முகம்

1947-ஆம் ஆண்டில் தேசமெங்கும் காந்தியடிகளின் 79-ஆம் ஆண்டுவிழாவைக் கொண்டாடிய போது இச்சிறுநூல் அன்புபற்றிப் பாடப்பெற்றது. அடிகளின் சத்திய சோதனை, அஹிம்சைத் தத்துவம், யாவர்க்கும் எளிவரும் இயல்பு, இணையற்ற நகைச்சுவை இத்தகைய சிறப்புக்களைப் பாராட்டும் நிலையில் இப் பாடல்கள் அரும்பின.

2. மகாத்மா 1948-இல் அமரநிலை உற்றனரேனும், அவர் புகழ், இந்நிலவுலகில் சமாதானம் தழைத்தற்கேற்ற ஒரு புதிய சகாப்தத்துக்கு வழிகாட்டியாக, நீடூழி நின்று நிலவும் என்பது நிச்சயம்.

3. பாட்டுடைத் தலைவனைப் பாலகனாகப் பாவித்து, அவனுடைய பின்னைப் பெருமைகளை அப்பிள்ளை மீதேற்றிப் பாடுவது பிள்ளைத்தமிழின் பெற்றியாகும். பாராட்டுக் கூறற்கேற்ற வாய்ப்பான பண்பாடுகளையுடையது இது. குழந்தையைக் கொஞ்சும் தாயுள்ளத்தின் அன்பை விஞ்சிய வேறு அன்பு உலகில் உளதோ?

4. பிள்ளையறிவுகொண்டு பேதையேன் பாடி அச்சிட்ட **"அப்பர் சுவாமிகள் பிள்ளைத்தமிழைச்"** சில அருந்தமிழறிஞர்கள் பாராட்டி ஆசி கூறி அருளியது இப்பணிக்கு ஒரு தூண்டுதலாயிற்று.

5. என்னைத் தமிழ்ப் படிப்பில் பழக்கியும், தமிழ்க் கவி பாடுவதில் ஊக்கியும் வருபவரும், இந்தப் பிள்ளைத்தமிழில் சில இடங்களில் அரிய குறிப்புக்கள் உதவி இதனை நிறைவேற்றுவித்தவரும் ஆகிய என் தந்தையார்க்கு நன்றி கூறின் அது அளவிலடங்காது. அவர்களை எளியேன் எஞ்ஞான்றும் வணங்கி வழிபடும் கடப்பாடு உடையேன்.

6. இக்கவிகளைப் பார்த்து, சென்னை, இராவ் பகதூர், தணிகைமணி, உயர்திரு. **வ. சு. செங்கல்வராயபிள்ளை, M.A.** அவர்களும், அண்ணாமலைப்பல்கலைக் கழகத்தில் இப்போது ரிஜிஸ்தரார் பதவி வகிக்கும் உயர்திரு. **ச. சச்சிதானந்தம் பிள்ளை, B. A., L. T.** அவர்களும், புதுக்கோட்டை காலேஜ் தமிழ்ப் பேராசிரியர், கவிராஜ பண்டிதர் பிரம்மஸ்ரீ **நா. கனகராஜ ஐயர், B.O.L.** அவர்களும் பாராட்டியுள்ளார்கள்.

7. இச்சிறு நூல் 18-12-48-இல் அண்ணாமலைப் பல்கலைக்கழக ஆசிரியர்கள் நிறுவியுள்ள காந்தி ஆராய்ச்சிச் சங்கத்தின் தனிக்கூட்டம் ஒன்றில், தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் **A. சிதம்பரநாத செட்டியார் M.A., Ph. D.** அவர்கள் தலைமை வகிக்க, அந்நல்லவைக் களத்தில் அரங்கேற்றம் பெற்றது. இச்சங்கத்துக்கும் ஷை செட்டியார் அவர்களுக்கும் எனது நன்றி உரியதாகும்.

**முத்துநிலையம்,**
*19—12—48.*

**மு. கோ. இராமன்,**
அரங்கநாதபுரம், திருக்காட்டுப்பள்ளி.

# காந்தி அடிகள் பிள்ளைத் தமிழ்.

## காப்பு.

மோகன தாஸ்கரம் சந்திர காந்திமேல் மொய்கரும்பின்
பாகன பைந்தமிழ்ப் பிள்ளைத் தமிழைப பகர்வதற்கே
மாகன காம்பர மால்மரு கோன்முக வாரணத்தன்
ஏகாகன கப்பதம் காப்பென வுள்ளத்துக் கொள்ளுவமே.

[பாகு அன்ன - பாகை ஒத்த; கனக அம்பரம் - பொன் ஆடை]

## நூல்.

### 1. காப்புப் பருவம்.

ஆல காலம் அமுத மென்ன
அடக்கு நீல கண்டனை
அவனி டஞ்சார்ந் தவனி காக்கும்
அமலைவிமலை யன்னையை
நீல கண்டம் ஏறு முருக
நிமலனைக் கணேசனை
நேமி சங்கம் அங்கை யானை
நிலமி சைவ ணங்குதும்
சால இந்துஸ் தான மென்றுஞ்
சார்சு தந்தி ரவிதை
தரணி யில்வித் திட்ட ஹிம்சைத்
தண்ணீர் வார்க்கும் புண்ணிய
சீல னும்நம் காந்தி மகனைச்
சிறந்தெஞ் ஞான்றும் ஓங்கியே
தேச சேவை செய்ய வல்கிற்
செவ்வி திற்பு ரக்கவே.

[நீலகண்டம் - மயில்]

## 2. செங்கீரைப் பருவம்.

தென்னைப் பிரிக்கா இந்திய மாந்தர்ச்
    சேருந் துயரமெலாம்
தெளிந்தே யவற்றைக் களைந்தற நீக்கத்
    திடமுட னெதிர்ப்பட்ட
இன்னைப் பலவும் இன்புடன் ஏற்றே
    இயக்கினை சத்தியப்போர் ;
இந்திய மக்கள் விழைகுவ தென்றும்
    ஏற்ற சுதந்திரமா
மன்னும் ஜார்ஜு மகிப ரிடத்தே
    வட்ட மேசையினில்
மாவா தம்பல காவதஞ் சென்றே
    வழக்கில் முழக்கியருள்
செந்நாப் புலவா ! கரம்சந்த் காந்தி !
    செங்கோ செங்கீரை;
செறிந்த அரசியல் சிறந்த சீலா !.
    செங்கோ செங்கீரை.

## 3. தாலப் பருவம்.

அடிமை யிருளைக் கடிந்தொளிரும்
    அறிவுச் சுடரே ! தாலேலோ,
அஹிம்சை வாளால் அருங் கொலைகள்
    அகற்றுந் தகவோய் ! தாலேலோ,
மடமை நீக்கும் மாசில்லா
    மணியே ! தாலோ தாலேலோ,
வையம் புகழுஞ் சாந்தமுறும்
    வள்ளால் ! தாலோ தாலேலோ,
மிடிமை களையும் வீறுடைய
    விபுதா ! தாலோ தாலேலோ,

வெதும்பும் நிலைவந் தழி உண்ணு
விரதம் பூண்போய் ! தாலேலோ,
உடைமை எவர்க்கும் விடுதலை என்
றுரைப்பாய்! தாலோ தாலேலோ,
உலகம் போற்றும் காந்தியெனும்
ஒருவா ! தாலோ தாலேலோ.

## 4. சப்பாணிப் பருவம்.

"வெள்ளை யா! நீ வெளியே" றென்றே
வீரமிக வுரைத்தோய் ;
வேண்டும் அன்பு பகைவ ரிடத்தும்
விருப்பமுடன் கொண்டோய் ;
'தள்ளை யா!புன் புலாலுண்ணுதலை ;
தாங்குக சத்தியத்தை ;
தரணி மனித ரியாவரும் ஒன்றே ;
சாதிகள் வேறில்லை ;
கிள்ளை யாம்சொற் பெண்பா லவர்தாம்
கீழில்லை; ஒத்தவரே ;
கேட்பின் இந்த வாசகத்தைக்
கேடில்லை நலம்' எனவே
கொள்ளை யா இன் புலவ மொழிந்தோய் !
கொட்டுக சப்பாணி ;
குரிசில் மகாத்மா காந்திப் பேரோய் !
கொட்டுக சப்பாணி.

[தள்ளையா - தள்ளு + ஐயா; கிள்ளை - கிளி;]

## 5. முத்தப் பருவம்.

நாவார் சுவைசேர் நவவமுதே !
நானிலத்தோர் நவநிதியே!

நல்ல றத்தின் திருவுருவே!
    நாளும் பெருமை நாயகமே!
பூவா தரிக்கும் பூரணமே!
    பொறையார் நிறைவாம் பூஷணமே!
போதந் தழைக்கும் புண்ணியமே!
    புகலும் ஞான வாரிதியே!
' ஆவா வுலகீர்! கொலைகளவை
    அழிப்பீர்; ஒழிப்பீர் ஆசையினை;
அன்பே விதைப்பீர்;' என "நெஞ்சை
    அள்ளும்" நற்பிரார்த் தனைபுரியும்
மூவா மருந்தே! கடற்பிறவா
    முத்தே! முத்தந் தருகவே,
மோகன தாச காந்திப்பேர்
    முதல்வா! முத்தந் தருகவே.

[பூ-பூமி; வாரிதி-கடல்; "நெஞ்சை அள்ளும்" மேற்கோள்-பாரதியார் "செந்தமிழ்நாடு" என்பதிலிருந்து]

## 6. வருகைப் பருவம்.

தீண்டா மைக்கும் கட்குடிக்கும்
    செலவு கொடுத்த நலப்பெரியோய்!
தேசீ யப்போர் நடத்த வந்து
    திரளு மிளைஞர் அனைவோர்க்கும்,
'வேண்டாம் மறப்போர்; அறப்போரே
    விழைந்து கொள்ளற்பால'தென
விருப்ப முடன்அம் முறை முறையே
    விதந்து காட்டும் வித்தகனே!
தூண்டார் வத்தெந் நாட்டவரும்
    தொடர்ந்துன் னடியைப் பின்பற்றும்
தூய்மை யுடையோய்! துரிசறுப்போய்!
    துரியங் கடந்தே ஒளிர்கிற்போய்!

காண்டற் கரிய கடவுளருட்
கருணை உருவே! வருகவே,
காந்தம் போல்வாய்! காந்தியுளாய்!
காந்தி! வருக வருகவே.

[ஆர்வம் - ஆசை; துரியம் - சுத்த நிலை]

## 7. அம்புலிப் பருவம்.

எண்ணெண் கலையும் இவர்க்குண்டால்;
ஈரெண் கலையே நீயுடையாய்;
இவர்தங் கலைகள் எஞ்ஞான்றும்
ஏற்ற முடனே வளர்ந்திடுமால்;
எண்ணின் உனது கலைதேயும்;
இருக்கும் மாசுன் உடலத்தில்;
இவரெம் மாசு மறிந்திலரால்;
'ஏற்பதிகழ்ச்சி' என்பதைநீ
எண்ணின் றிரவி யிடமேற்றே
இரவில் ஒளிர்வாய்; இவரென்றும்
இயல்பின் ஏலா தொளிர்கின்றார்;
இலங்கு காந்தி இவர்பேர்; நல்
வண்ண மாட அழைத்தனரால்;
வாஅம் புலிநீ வாவாவே,
வள்ளல் காந்தி யுடனாட
வாஅம் புலிநீ வாவாவே.

[எண் இன்று - எண் இன்றி, நினைக்காமல். சந்திரன் சூரிய ஒளியால் சோபை பெறுகிறான் என்பதுபற்றி.]

## 8. சிற்றிற் பருவம்.

பொன்னால் மணியாற் பவளத்தாற்
புஷ்ப ராகம் மரகதத்தால்
புவியிற் சிறக்கும் வச்சிரத்தால்
பூணற் கருங்கோ மேதகத்தால்

தன்னே ரில்லா வகைவகையாம்
தரளம்இவற்றால் தமியேங்கள்
தரையிற் சிற்றில் சிறப்பாகச்
சமைக்கும் பணியில் அமைந்தமையால்
மன்னா! நினது வரவறியேம்;
வந்தித் திருக்கை எழாதிருந்தேம்;
மாறாக் கருணை மனங்கொண்டு
வருபோர் பந்தர் வணிகர்குல
நன்னாயகமே! எஞ்சிற்றில்
நற்சீரடியாற் சிதையேலே,
நம்பீ! காந்தி! எஞ்சிற்றில்
நற்சீரடியாற் சிதையேல்.

[இருக்கை - ஆசனம்; போர்பந்தர் - காந்தி பிறந்த ஊர்.]

## 9. சிறுபறைப் பருவம்.

'பவ்வநீ ராடைப் படிமிசை என்றும்
பற்பல மாண்புசேர் செம்மைப்
பான்மையில் யாரும் இன்புற வாழும்
பண்பிவை; பரிவுடன் பாரீர்;
எவ்வகை உயிர்க ளிடத்துமுள் ளன்பே
இயற்றுதல் சிறப்புடைத்' தென்றும்,
'எங்குமெப் பொழுதும் யாவரும் இனிதின்
இசைப்பது சத்தியம்' என்றும்,
'செவ்விய அருளால் தெய்வநம்பிக்கை
செயலினிற் சொல்லினில் மனத்தில்
சேர்த்திடுவீரேல் செகதலத் துள்ளீர்!
செயம்பெறல் உறுதியாம்' என்றும்,
அவ்வியம் அகற்ற அருளிய காந்தி!
அணிசிறு பறை முழக் குகவே;

அரியகத்தூரி மணம் கமழ் காந்தி!
அணிசிறு பறை முழக் குகவே.
[பவ்வம் - கடல்; படி - பூமி; கத்தூரி மணம் - கஸ்தூரி பாய் தேவியின் திருமணம். கஸ்தூரி வாசனை தொனிப்பு.]

## 10. சிறுதேர்ப் பருவம்.

இம்மையில் எவரும் இன்பமே எய்தற்
கேற்ற பண்பிதெனும்
எல்லையில் அன்பே அச்செனு அமைய
ஈறில் தூய்மையொடு
மெய்ம்மையென் றிணைந்த உருளைகள் கோத்து
வியன் தெய்வருளாணி
விசித்துநன் முயற்சி ஊக்கமாம் புரவி
விளங்கப் பூட்டி அதில்
பொம்மெனப் பொறுமைச்சாரதி அமர்த்திப்
பொய்ம்மை வறுமை பிணி
போங்கெதிர் தாக்கும் போர்க்களத் தறப்போர்
புரிந்தே புகழ் என்னும்
செம்மையிற் பெருந்தேர் உருட்டிய காந்தி!
சிறுதேர் உருட்டுகவே,
தீனம ஞேகர! கருணு சாகர!
சிறுதே ருருட்டுகவே.

[தெய்வருளாணி - தெய்வ அருளாகிய ஆணி.]

### வாழ்த்து.

**வாழிய காந்தி மகான்; வாழிய காந்திநெறி**
**வாழிய சாந்திநலம் வையமெலாம்—வாழியே**
**அன்பும் அருளும் அறிவும் அறநெறியும்**
**இன்பும் இசைய இனிது.**

---

Sri Mahabharatham Press, Kumbakonam, January 49, C. 250.

# நால்வர் பிள்ளைத்தமிழ்

—(o)—

**இது 'சித்தாந்தப் பத்திரிகை'யின் தனி வெளியீடு; அறு நான்கு**
**சைவப் பெருந்தகையாளர்,**
**உயர்திரு S. சச்சிதானந்தம் பிள்ளை, B.A.L.T., அவர்கள்**
**முன்னுரையாக வரைந்த மதிப்புரையிற் கூறுவது:—**

1. நால்வர் பிள்ளைத்தமிழ் என்னும் இந்நறுநூல் இப்போது வெளி வருவது மகிழ்ச்சியுடன் வரவேற்கத்தக்கது. இதனை நால்வர்கள்பால் பற்று உள்ள † நான்கு புலவர்கள் யாத்துள்ளனர்.

பாடசாலைப் பரீட்சாதிகாரியாயிருந்து ஒய்வு பெற்றுள்ள திராவிடக் கவி மணி, திரு. வே. முத்துஸாமி ஐயர், M.A.,L.T. அவர்கள் சிவப்பற்றும் தமிழ்ப்பற்றும் நாட்டுநலப்பற்றும் இந்நூல் வெளிவருவதற்குக் காரணமாய் இருந்தன. நால்வர் சரித நிகழ்ச்சிக் குறிப்புக்களும் மொழிக்கு மொழி தித்திக்கும் அவர்தம் திருவாக்குப் பகுதிகளும் இந்நூலின் செய்யுட்கள் பலவற்றிலும் செறிந்துள்ளன. இவை கற்பார்க்குப் பெருங்களிப்பூட்ட வல்லன. எனதரிய நண்பராகிய திராவிடக் கவிமணியவர்கள் தம்மைப் போலவே தம் புதல்வரையும் சிவபத்தி அடியார் பத்தி செந்தமிழ்ப்புலமை இவற்றில் சிறந்த சான்றோனாக்கியதைக் குறித்து, மனமார்ந்த பாராட்டுதலைப் பேருவகையுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

2. கவிமணி உயர்திரு **S. தேசிகவிநாயகம் பிள்ளை** அவர்கள் :— பிள்ளைத் தமிழ்ப் பாடல்கள் எளிய இனிய தமிழில் அழகாக அமைந்துள்ளன. பருவத்துக்கொரு பாட்டு வீதம் பாடியிருப்பது இக்காலத்துக்கு ஏற்ற முறையே. செல்வன் கோதண்டராமன் கவித்திறம் பாடல்களில் நன்றாக விளங்குகிறது.

3. நாமக்கல் கவிஞர், உயர்திரு **V. இராமலிங்கம் பிள்ளை** அவர்கள் :— நால்வர் பிள்ளைத்தமிழ் மிகவும் மெச்சத்தக்க முறையில் அமைந் துள்ளது. நண்பர்கள் பலர் இதைப் படித்துப் பாராட்டினார்கள். இன்னும் சிலர் படிக்க எடுத்துப்போயிருக்கிறார்கள். தங்கள் குமாரருக்கு என் வாழ்த்துகள்.

4. இராவ் பகதூர் தணிகை மணி, உயர்திரு **V. S. செங்கல்வராய பிள்ளை M.A.** அவர்கள் முகவுரையிற் கூறுவது :—

இப்பிள்ளைத்தமிழை யாத்தற்குக் காரணபூதராயிருந்த திராவிடக் கவிமணி பிரமஸ்ரீ வே. முத்துஸாமி ஐயர், M.A.L.T. அவர்கள் கும்பகோணம் **ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள்** முன்னிலையில் இப் பிள்ளைத்தமிழ்களைப் படித்துக் காட்டி நூலாசிரியர் நால்வர்க்கும் அவர்கள்பால் தங்கக்காசும் ஆசி யும் பெற்றனர்.

---

† சம்பந்தர் மீது—உயர்திரு V. S. செங்கல்வராய பிள்ளை M.A., சென்னை;
அப்பர் மீது ,,—செல்வன் மு. கோ. இராமன்: அரங்கநாதபுரம்;
சுந்தரர் ,,—பிரமஸ்ரீ கவிராஜ பண்டித நா. கனகராஜ ஐயர், புதுவை;
மணிவாசகர் ,,—வே. முத்துஸாமி ஐயர், M.A.L.T., அரங்கநாதபுரம்.

## இந் நூலாசிரியரின் தந்தையார் இயற்றிய நூல்கள்.

**1. தொல்காப்பியம் பொருள் அதிகார ஆராய்ச்சி ;**
பி. ஏ. மாணவர்களுக்குப் பாடமானது. அணா 6

**2. தனிப்பாக் கோவை;** சந்தர்ப்பமும் குறிப்புங் கொண்டது. 8

**3. பத்மினி**—சரித்திர இயைபு பெற்ற ஓர் உண்மைத் தமிழ்க் கதை; இண்டர் மாணவர்க்குப் பாடமானது. 12

**4. மாயூர நாதர் அந்தாதி;** குறிப்புக்களுடன். ... 4

**5. விநாயகர் துதிப்பாக்கோவை** - பல விநாயகர் துதிகள்; ... 4
62 பாடல் கொண்டது; குறிப்புக்களுடன்.

**6. முருகன் துதிப்பாக் கோவை ;** ஆறு படை வீடுகளிலும் பிற தலங்களிலும் அமரும் குமரக் கடவுள் மீது பாடிய 108 கவிகள் கொண்டது; குறிப்புக்களுடன். 4

**7. ஆசிரியர் துதிப்பாக் கோவை ;** பிர்ம்மஸ்ரீ மஹாமஹோபாத்யாய டாக்டர் சாமிநாதையர் அவர்கள் மீதும், பிரகிருத ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் (காமகோடி பீடம்) மீதும் பாடியன ; 250 பாடல் கொண்டது. ... 8

**8. கதையும் பாட்டும்**—இரண்டு பாகங்கள் ;
பால பாடசாலைகளுக்கேற்றவை; தனித்தனி ... 3

**9. கஜாரணியேசுவரர் பதிகம், காமாக்ஷியம்மை பதிகம், அலங்காரநாயகி பதிகம், வரகூர் வேங்கடேசர் பதிகம், முருகவேள் போற்றித் துதிகள்** முதலியன ... **விலை இல்லை.**

---

## இந் நூலாசிரியர் இயற்றியவை :

**1. நால்வர் பிள்ளைத்தமிழ்** ... 4

**2. தஞ்சைப் பெருவுடையார் மாலை** (அச்சில்) 30 துதிகவிகள்; சென்னை இராவ்பகதூர், தணிகைமணி, உயர்திரு V. S. செங்கல்வராய பிள்ளை, M.A. அவர்கள் சிறப்புப் பாயிரம் கொண்டது. ... 4

---